ஆதிசங்கரர் அருளிய

# ஸௌந்தர்யலஹரீ



பப்ளிஷர்ஸ்:

கிரி ப்ரதர்ஸ் - கிரி ப்ரஸ்

சென்னை 17.



ஸ்ரீ சங்கர பகவத்பூஜ்யபாதாள் அருளிய

# ஸௌந்தர்யலஹரீ

(ஸ்ரீ மீனாக்ஷீ பஞ்சரத்னம், மீனாக்ஷியின் அஷ்டோத்ர நாமாவளி, பீஜாக்ஷரம், யந்த்ரம், ப்ரயோகம், பூஜை செய்யவேண்டிய க்ரமம், பூஜா பலன் முதலியவைகளுடன்)


சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரும்மஸ்ரீ

தேதியூர் *ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியள்*

அவர்களால் எழுதப்பட்டது



பப்ளிஷர்ஸ்:

**கிரி ப்ரதர்ஸ் - கிரி ப்ரஸ்**

T. Nagar : : : : சென்னை-600 017

பத்தாவது பதிப்பு
பிப்ரவரி 1989

கிரி ப்ரசுரம்-4






பதிப்பாளர்கள்:
**கைலாஸம் க்ருஷ்ணன், கைலாஸம் சாம்பசிவன்**
**கிரி பிரதர்ஸ் — கிரி பிரஸ்**
**96, ஜி. என். செட்டி ரோட், தி. நகர்,**
**சென்னை-600 017**
**Phone : 863080**

விலை ரூ. 60/-

**"கைலாஸ்", 6, கிரி ரோட், சென்னை-600 017.**

அச்சிட்டோர் :
நொவீனு ஆப்செட் பிரிண்டர்ஸ்,
ஜஸ்ஹவுஸ், சென்னை-600 014.

॥ श्रीः ॥

मुद्रा

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छंकर भगवत्पादप्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटि पीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादादेशानुसारेण
श्रीमज्जयेन्द्रसरस्वतीश्रीपादैः क्रियते नारायणस्मृतिः ।

எல்லா உலகங்களையும் ஸ்ருஷ்டித்து காப்பாற்றி வரும் பராசக்தியின் உபாஸனம் அவசியமானது என்பதை உணர்ந்த ஸ்ரீபகவத் பாதாசார்யாளால் கைலாஸத்திலிருந்து கொண்டு வரப்பட்டு தன்னால் பூர்த்தி செய்யப்பட்டுள்ளதும், மந்த்ர சாஸ்திர நுணுக்கங்கள் அமைந்திருப்பதுமான ஸௌந்தர்யலஹரீ ஸ்தோத்ரத்தின் பொருள், ஒவ்வொரு ச்லோகத்திற்கும் தகுந்த யந்த்ரம், பூஜை செய்யவேண்டிய கிரமம், பூஜாபலன் இவைகளை தமிழறிந்தவர்கள் அறிந்துகொண்டு பராசக்தியை ஆராதித்து மேன்மையை அடையவேண்டுமென்னும் உத்தம நோக்கத்துடன் ப்ரபல தேவீ உபாஸகராக இருந்தவரும் அபிராமபுரத்தில் ஸ்ரீபகவத் பாதாளுக்கு ஆலயமமைத்து ப்ரஸித்தியை அடைந்திருப்பவருமான தேதியூர் ஸுப்ரமணிய சாஸ்திரிகளால் எழுதப்பட்டு திருவல்லிக்கேணியில் கைலாஸமய்யரால் தன்னுடைய கிரி ப்ரஸ்ஸில் அச்சிடப்பட்டு ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு பரமோபகாரமாகயிருந்த இந்நூல் இப்போது கிடைப்பது துர்லபமாயிருப்பதால் கைலாஸமய்யருடைய குமாரர்களாகிய ஸ்ரீ கிருஷ்ணன், ஸ்ரீ ஸாம்பசிவன் இவ்விருவர்களும் முன்வந்து இந்த நூலின் மறுபதிப்பை வெளியிடுவதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இவ்வுத்தம நூலின் துணையுடன் பராசக்தியை ஆராதித்து விரும்பும் பயன்களை அடைந்து மேன்மைகளை அடைவார்களாக.

ஸ்ரீ காஞ்சி க்ஷேத்ரம்
அநல ஆஷாட அமாவாஸ்யை

நாராயணஸ்ம்ருதி:

உ

# பதிப்புரை

பாருக்கெல்லாம் திலகமாம் நம் பாரத நாடு: பூரண ஞானம் பொலிந்த நன்னுடு. புத்தர் பிரான் அருள் பொங்கிய நாடு. மாமுனிவோர் பலர் வாழ்ந்த பொன்னுடு என்றெல் லாம் மஹாகவி பாரதியால் புகழ்ந்து பாடப்பெற்றது நம் பாரத தேசம்.

இப்புண்ணிய பூமியில் அவதரித்த மஹான்களில், நம் அறி விற்கெட்டியவரை, இன்றைக்குச் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய கருணைக் கடலான சாக்ஷாத் பரமேசுவரனின் அம்சமான **ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்கள்** அவர்கள்தான் முதன்மையானவர். நாம் உய்விக்கும் பொருட்டும், நமது நலனையே குறிக்கோளாகக் கொண்டும், நமக்காகவே கருணை கூர்ந்து அநுக்ரஹித்து அருளிய வேதங்கள், உபநிஷத்துக்கள், இதிஹாஸங்கள், தர்ம சாஸ்த்ரங்கள், ப்ரகரணங்கள், மற்றும் இதர க்ரந்தங்கள் மூலம் உலகிலுள்ள எல்லா மதங்களிலும் இந்து மதமே சிறந்தது, நமது சாஸ்த்ரங்களே உயர்ந்தது, நமது கலாசாரங்களும், தர்மங்களுமே உன்னதமானவை என்று போதித்துள்ளார்கள்.

இந்து சமுதாயத்துச் சாஸ்த்ரங்களின் சிறப்புகளும், பாரத தர்மத்தின் பெருமையும், உயிருக்கு ஆதாரபூர்வ மான பக்தி நெறியும், காலத்தால் அழிவற்ற நம் கலாசார மேன்மையும், பண்புகளும், நம் நாட்டில் மட்டுமின்றி கடல் கடந்த அந்நிய நாடுகளிலும், ஸ்வாமி விவேகாநந்தர் போன்ற தவச்ரேஷ்டர்களால் ஆதாரக் கோட்பாடுகளுடன் அவ்வப் போது நிரூபிக்கப்பட்டு வந்திருக்கின்றன.

நம் சாஸ்த்ரங்களில் பொதிந்துள்ள ஆழ்ந்த கருத்துக்களை யும், பக்திமார்க்கங்களையும், தர்மத்தின் பெருமைகளையும், நமக்கு உணர்த்தி, நமது புண்ய பூமியில் வாழ்ந்த, வாழ்ந்து கொண்டிருக்கிற மஹான்கள், தவச்ரேஷ்டர்கள், யோகீசுவரர் கள், ஞானேசுவரர்கள் எல்லோரையும் நாம் அறிந்திருக்க ந்யாயமில்லை. ஆயினும் இந் நூற்றுண்டில் நம்மிடையே வாழ்ந்த பகவான் ராமகிருஷ்ணர், பகவான் அரவிந்தர், பக வான் ரமணர் போன்ற மஹான்களைப் பற்றித் தெரிந்துகொள்ள நமக்குச் சிறிது வாய்ப்பு இருந்தது. தவிரவும், நாம் செய்த

பூர்வ ஜன்ம புண்ய பலன் இன்றைய தலைமுறையினரிடையே
நடமாடி வரும் ப்ரத்யக்ஷ தெய்வமான நம் காஞ்சிப் பெரியவர்
களது மகிமையையும் அவரைப் போன்ற நம் மதத் தலைவர்
களை பிற மதங்களைச் சார்ந்த அந்நிய நாட்டினரும் தேடி
வருவதைப் பார்க்கும்போது, நம் இந்து மதத்தின் பெருமை
இவ்வளவுதான் என்று வரையறுக்க முடியாதது ஒரு விசேஷம்.
இவைகளைப் பார்க்கும்போது 'நான் ஓர் இந்தியன், அதுவும்
இந்து' என்று கூறிக்கொள்வதில் பெருமிதம் கொள்ளவேண்டும்.

நமது வழிபாட்டின் முறைகள்தாம் வெவ்வேறாக நடை
முறையில் இருந்து வந்திருக்கின்றன. அம்பாள், சக்தி, காளி,
கணபதி, முருகன், சிவன், தக்ஷிணாமூர்த்தி, நாராயணன்,
வேங்கட வரதன், லக்ஷ்மீ, சரஸ்வதீ, ராமன், கிருஷ்ணன் என்று
பலவாறான உருவ வேறுபாடுகளில், அவரவர்கள் மனதிற்
கேற்றவாறு வழிபாடுகளை அமைத்து வந்திருக்கிறோம். அப்படிச்
செய்து பெறும் பலன்களை அடைவதற்கும், அநுபவிப்பதற்கும்,
அந்த அந்த மூர்த்திகளைப் பற்றிய பெருமைகளையும் ஸ்ரீமத்
பகவத்பாதாள் ஸ்தோத்ர க்ரந்தங்கள் மூலமாகவும் நமக்கு
அருளிச் செய்திருக்கிறார்கள்.

அவைகளில் முதன்மையான **ஸௌந்தர்யலஹரீ** என்ற
இந்த க்ரந்தம், ஸ்ரீ ஜகன்மாதா பரதேவதையைப் பற்றி
இயற்றப்பட்ட 100 ச்லோகங்களைக் கொண்டதாகும். முதல்
41 ச்லோகங்களில் **ஸமயாசாரம்** என்ற பரதத்வத்தை அநு
சரித்து, தேவியினுடைய ஸ்வரூபத்தை வர்ணித்துவிட்டு, 42
முதல் 100 வரை உள்ள ச்லோகங்களில் **ஸமயா** என்ற பெய
ருள்ள தேவியினுடைய சிரஸ்ஸில் உள்ள கிரீடம் முதல் பாதார
விந்தம் வரை ஒவ்வோர் அங்கமாகத் தேவியை விஸ்தாரமாக
வர்ணித்திருக்கிறார்கள்.

பராசக்தியான ஜகன்மாதா பரதேவதைதான் ஸகல
தேவதைகளுக்குள் உத்க்ருஷ்டமான தேவதை என்றும், அநேக
ஜன்மங்களில் அளவிட முடியாததான தவத்தைச் செய்தவர்
களால்தான் தேவியை; நமஸ்காராதிகளாலோ, ஸ்தோத்ரங்
களினாலோ, த்யானாதிகளாலோ ஆராதித்து, ஜன்ம ஸாபல்
யத்தை அடைய முடியும் என்றும், அப்படி ஸுக்ருதம் என்ற
தவத்தைச் செய்யாதவர்களுக்கு, தேவியினுடைய விஷயத்தில்,
பூஜிக்க வேண்டும் என்று மனம் வருவதே துர்லபம் என்றும்,
பரதேவதைக்கு நிகராக மற்றொரு தேவதை இல்லை என்றும்
மற்ற எல்லா தேவதைகளும் அப் பரதேவதைக்குள்
ளேயே அந்தர்முகமாயுள்ளதனால் (ஐக்கியமாயுள்ளதனால்) அந்த
தேவியை உபாஸித்தாலே, மற்ற எல்லா தேவதைகளையும்

ப்ரீதி செய்த பலனுகும் என்றும், அரிதான மானிட ஜன்மாவை அடைந்தவர்கள், ஸர்வலோகத்திற்கும் மாதாவான பராசக்தி யென்ற பரதேவதையை உபாஸிக்க வேண்டியது மிகமிக அவச்யம் என்றும் ப்ரகடனப் படுத்தியுள்ளார்கள்.

இந்த ஸௌந்தர்யலஹரீ என்ற ஸ்தோத்ர க்ரந்தத்திற்கு, ஸம்ஸ்கிருத ஸாஹித்ய ஸாம்ராட் சாஸ்த்ர ரத்னுகரம் ப்ரம்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியள் அவர்கள், 100 ச்லோகங்களுக்கும், பதவாரியான அர்த்தங்களும், விரிவான தாத்பர்யமும் எளிதில் படித்து அறிந்து கொள்ளும் முறையில் எழுதியிருப்பதோடு, ஒவ்வொரு ச்லோகத்திற்கும், யந்த்ரம், பீஜாக்ஷரம், ப்ரயோகம், பூஜை செய்யவேண்டிய முறைகள், பூஜா பலன் முதலியவைகளேயும் அளித்துள்ளார்கள். ஸ்ரீவித்யோபாஸகரான சாஸ்த்ர ரத்னுகரம் அவர்களின் வாக் விலாஸத்தையும், தர்ம சாஸ்த்ரங்களில் அவருக்கு இருந்த அபார ஞானத்தையும் பற்றி ஆஸ்திக உலகம் நன்கு அறியும்.

1944 ஆம் ஆண்டில் இப்புத்தகத்தின் முதற் பதிப்பு எங்கள் தகப்பனுரால் வெளியிடப்பட்டது. இப்போது வெளி வருவது ஒன்பதாவது பதிப்பு என்பதை நினேக்கும்போது, இதில் அடங்கியுள்ள விஷயங்கள் எவ்வளவு சிறப்பானவை, கருத்துக்கள் மக்களே எவ்வளவு தூரம் கவர்ந்திருக்கின்றன என்பதை எண்ணி மகிழ்ச்சியடைகிறோம். ஸ்தோத்ர சம்பந்தமான ஒரு நூல் ஒன்பதாவது பதிப்பு வெளிவருவது அநேகமாக இது ஒன்றுகத் தான் இருக்க முடியும் என்று எண்ணுகிறோம்.

சென்ற மூன்று பத்தாண்டுகளில் இந்தப் புத்தகத்தை மூலாதாரமாகக் கொண்டு, ஓரிரு மலிவுப் பதிப்புகள் வெளி வந்துள்ளபோதிலும், இம்மாதிரியான விளக்கவுரையுடன் கூடிய பதிப்பு ஒருவராலும் இதுவரை வெளியிடப் படவில்லே என்பது குறித்துப் பெருமை கொள்கிறோம். ஸமீபத்தில் நமது ஆசார்யாளின் அநுக்ரஹத்துடன் ஒரு பதிப்பு வெளி வந்துள்ளது. ஆயினும் அது ஸம்ஸ்க்ருதத்தில் பாண்டித்யம் பெற்றவர்களால்தான் படித்து க்ரஹித்துக் கொள்ளக் கூடியது என்று அறிந்து சமாதானம். அடைந்தோம்.

மேலும் நமது பூஜ்ய ஆசார்யாள் அவர்களும், சென்ற ஒரு வருடத்திற்கும் மேலாக, அவர்களேச் சந்திக்க நேர்ந்த ஒவ்வொரு ஸந்தர்ப்பத்திலும், "உங்களுடைய இந்த ப்ரசுரம் எப்பொழுது வெளிவரும், அடுத்த பதிப்பு எப்பொழுது கொண்டுவரப் போகிறீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே யிருந்தார்கள். அன்னுருடைய அருளிஞலும், ஆசியிஞலும் தான் அச்சுக்கு எடுத்த மூன்று மாதங்களுக்குள்ளாக, இப்பதிப்பு,

வெளிவர முடிந்தது என்று ப்ரமாணமாகக் கூற முடியும். நமது ஆசார்யாள் அவர்கள் இப்பதிப்பிற்காகவே கருணைகூர்ந்து அளித்துள்ள ஸ்ரீமுகத்தையும் இத்துடன் ப்ரசுரிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது குறித்து இதை நாங்கள் செய்த பூர்வ ஜன்ம ஸுக்ருதமாகக் கருதி, அன்னாருடைய க்ருபாகடாக்ஷம் எங்கள் பால் என்றென்றும் நிலைத்து இருந்துவரவேண்டும் என்று அவர்களுடைய பாதபத்மங்களில் எங்கள் ஹ்ருதய பூர்வமான நமஸ்காராதிகளை விண்ணப்பித்துக் கொள்கிறோம்.

இப்புத்தகத்தில் இணைக்கப் பெற்றுள்ள பல படங்களில், **ஸ்ரீபாலாதிரிபுரஸுந்தரீ** என்ற படம், இந் நூலில், 8ஆவது 92ஆவது ச்லோகங்களில், ஸ்ரீமத் பகவத்பாதாள் எவ்வாறு ஜகன்மாதாவான பரதேவதையை வர்ணித்திருக்கிறாரோ அவ்வாறே வரையப்பட்டது. இப்படத்தின் மூலப்பிரதி கோவில்பட்டி, ஸ்ரீமான் கொண்டைய ராஜு அவர்களால் பலவித வர்ணங்களில் எழுதப்பட்டு, ப்ரத்யேகமாக பூஜையில் வைத்துப் பூஜிப்பதற்காகவே 20″×14″ சைஸில் அச்சிடப்பட்டு எங்களிடம் விற்பனையில் இருந்துவருகிறது. இந்நூலைப் படிப்பவர்களுக்கும், ச்லோகங்களைப் பாராயணம் செய்பவர்களுக்கும், மற்றும் அன்னையை ஆராதிப்பவர்களுக்கும் இப்படம் இன்றியமையாத ஒன்றாகும்.

இப்பதிப்பை ப்ரசுரிக்கும் இத்தருணத்தில், இதன் முந்தைய பதிப்புகளை, ப்ரசுரித்ததில் எங்கள் தந்தை, ஸ்ரீமான் கைலாஸமய்யர் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளையும், சிரமங்களையும் மனத்தில் இருத்தி அன்னாருக்கும், இந்தப் புத்தகத்தில் உள்ள பாலாதிரிபுரஸுந்தரீ படத்தையும், இதற்கு மூலாதாரமாயிருந்த ஸ்ரீஜகன்மாதா லலிதா பரமேஸ்வரீ படத்தையும் ப்ரசுரிக்க வேண்டிய அவச்யத்தை எங்களுக்கு உணர்த்தி, ஊக்கமளித்து, அவை ப்ரசுரமாவதற்குக் காரணமாயிருந்த எங்கள் அன்னை ஸ்ரீமதி அகிலாண்டேஸ்வரி அம்மாளுக்கும் எங்கள் ஹ்ருதயபூர்வமான அஞ்ஜலியை சமர்ப்பித்துக் கொள்கிறோம்.

மேலும் இப்புத்தகம் விற்பனைக்கில்லாமலிருந்த காலத்தில் இதை வாங்கிப் படித்துப் பயன் பெறவேண்டும் என்று தணியாது ஆவல் கொண்டு, அடுத்த பதிப்பு வெளிக்கொண்டு வரவேண்டிய அவச்யத்தைக் கடிதங்கள் மூலமாகவும், நேரிலும் எங்களுக்கு எடுத்துரைத்து, ஒருவருடத்திற்கும் மேலாகப் பலமுறை அணுகி ஏமாற்றம் அடைந்தபோதிலும், ஆர்வம் குன்றாமல், பொறுமையுடன் காத்திருந்த, நூற்றுக்கணக்கான வாசகர்களுக்கும் எங்கள் நன்றி கலந்த வணக்கங்கள். அவர்கள்

பொறுமையையும் ஆர்வத்தையும் குறித்துப் பூரிக்கும் அதே சமயம், பலவித இடையூறுகளால் முன்னதாகவே ப்ரசுரிக்க இயலாது போனதுகுறித்து எங்கள் வருத்தத்தையும் தெரிவித்துக்கொள்ள வேண்டியது அவச்யம்.

மற்றும் குறுகிய காலத்தில் இப்பதிப்பை அச்சடித்து உதவிய, நொவினு ஆப்செட் அச்சகத்தாருக்கும் எங்கள் ஹ்ருதய பூர்வமான சந்தோஷத்தை தெரிவித்துக்கொள்ளவேண்டியது எங்கள் கடமை.

ஸமீப காலங்களில், இமயம் முதல் குமரிவரை, பல இடங்களிலும் இந்த க்ரந்தத்திலுள்ள ச்லோகங்கள், பலவித ராகங்களில் பலபேர்களால் பாராயணம் செய்யப்பட்டு வருவது யாவரும் அறிந்ததே. எனினும், இதில் அடங்கியுள்ள கருத்துக்களை தெரிந்துகொண்டு அன்னையை எவ்வாறு ஆராதித்து ச்லோகங்களில் அடங்கியுள்ள மந்த்ர சாஸ்த்ர விசேஷங்களை அறிந்து, எவ்விதமான பலன்களை எப்படி அடையலாம் என்று விரும்புபவர்களுக்கு இந்நூல் மிகவும் உபயோகமாக இருக்கும்.

எல்லாம்வல்ல அன்னை பராசக்தி எல்லோரையும் காத்து ரக்ஷிக்க வேண்டும் என ப்ரார்த்தித்துக் கொள்கிறோம்.

சென்னை
17-2-1989.

கைலாஸம் க்ருஷ்ணன்.
கைலாஸம் சாம்பசிவன்.
பதிப்பாளர்கள்

# முதற்பதிப்பின் பதிப்புரை

அகிலலோக ஜனனியான ஆதிப்ராச்க்தியின் அருமை பெருமைகளை அறியாதவர் இப்பாரத பூமியில் இரார். அப்பர தேவதையின் பெருமையை நன்கு அறிந்திருந்தும், அன்னையை அனுதினமும் அன்புடன் விதி வழியே பூஜை செய்பவர்கள் ஒரு சிலர் தான் என்றே சொல்ல வேண்டும்.

ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசாரியார் அவர்கள் **ஸௌந்தர்யலஹரீ** என்னும் ஸ்தோத்திரத்திலடங்கிய நூறு ச்லோகங்களில், ஸ்ரீவித்யா உபாஸனக்ரமங்களை ஆஸ்திகர்களி டத்திலுள்ள கருணையால் வெளியிட்டிருக்கிறார். ஒவ்வொரு ச்லோகமும் அம்பிகையின் பெருமையை பலவிதமாக வர்ணித்து, அவளை பூஜிக்க வேண்டிய முறைகளையும் ஸூசிப்பித்து விதிப்படி பூஜிப்பவருக்கு ஏற்படும் லாபத்தையும் நன்கு ப்ரகாசப்படுத்துகின்றது.

இந்த ஸ்லோகங்களின் உட்கருத்தை அறிந்துகொள்வது பல்லாண்டுகள் வடமொழி பயின்று பாண்டித்யம் பெற்றவர் களாயும், ஸ்ரீவித்யோபாஸகர்களாயும் உள்ளவர்களுக்கு மாத்ரமே கூடுமன்றி, ஏனையோர்க்கு ஸாத்யமில்லை. என்போன்ற பாமரஜனங்கள், இந்த ஸ்தோத்ரத்தை ஸாதாரணமாக உட் கருத்தை யறிந்து கொள்ளாமலேயே பலர் வாக்யாலங்காரத்தி லீடுபட்டுப் பாராயணம் செய்து வருவதை நான் நன்கு அறிவேன். அதனால் பண்டிதர் பாமரராகிய அனைவருக்கும் பயன்படுமாறு, இந்தச் சிறந்த க்ரந்தத்தை, மூலமும் விசேஷ உரையுமாக வெளியிட வேண்டுமென்ற பேரவா என் உள்ளத்திலே வெகு நாட்களாக ஊறிக்கொண்டிருந்தது.

அன்னையின் அருங்கருணையால், எனக்கு வேத வேதாந்த க்ரந்தங்கள் எழுதிக் கொடுத்துப் பேருபகாரம் செய்து வரும் சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரம்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரமண்ய சாஸ்த்ரி யள் அவர்களிடம் இதைப்பற்றி பிரஸ்தாபித்தேன். சாஸ்த்ரி யள் அவர்களை தமிழுலகம் நன்கறியும். அவர்கள் கற்றோர்க்கு திலகமாக விளங்குபவர். ஆஸ்திகர்களுக்கு ஓர் ஆபரணம் போன்றவர். சாஸ்த்ர ஞானமுள்ளவர்கள், சாஸ்திரிகள் அவர்களை சாஸ்திர ரத்னமென்று மட்டில் பாராட்டுவதில் திருப்தி அடைவதில்லை. மிகச் சிறந்த ஸூக்ஷ்மார்த்தங்களை

எளிதில் மற்றவர் அறிந்துகொள்ள எடுத்து விளக்கும் ஆற்றல் சாஸ்திரிகளிடம் மிக அதிகம் என்பது யாவரும் அறிந்த உண்மையாகும். சாஸ்திரிகள் அவர்களே இந்நூலை என் விருப்பப்படி எழுதித்தர வல்லாரெனத் துணிந்து, என் எண்ணத்தைப் பூர்த்தி செய்து தரும்படி அவரைக் கேட்டுக் கொண்டேன். ஸத்விஷயங்களில் ஈடுபடுவதில் எப்பொழுதுமே பரம உற்சாகமடையும் சாஸ்திரிகளவர்களும் ''நான் முன்பு வெளியிட்டு வந்த ஸன்மார்க்கப்ரதர்சினியில் சில ச்லோகங்கள் வெளி வந்திருக்கின்றன; தாங்கள் இந்த ஸத் விஷயத்தை பூர்த்தி செய்தால், ஸகல ஜனங்களுக்கும் இஹபரஸாதக ஸாதனத்தைக் கொடுத்த பரம பாக்யவானுவீர்கள்'' என்று என்னைப் பரிவுடன் ஆசீர்வதித்தார்கள்.

ஜனங்களுக்குப் பரம ஸாதனமான நூலை, வித்யா விற்பன்னரும், லோகப்ரஸித்தருமான பெரியாரின் மொழி பெயர்ப்புடன் வெளியிடுவதைவிட வேறு வேலை அவ்வளவு முக்யமேயில்லை என்று தீர்மானித்தேன். அதன்படி சென்ற சில மாதங்களாக இந்த நூல் அச்சிலிருந்து வந்தது. இதன் ஆசிரியர் தனக்கு நேத்ர உபாதை இருந்த காலத்திலும்கூட இதை பெரிய கைங்கர்யமாகக் கருதி விஷயதானம் செய்து வந்தார்: மேலும் இந்நூலுக்கென்றே ப்ரத்யேகமாய் பூஜாவிதானங்களுக்குச் சக்கரங்கள் முதலியன அளித்துள்ளார்கள். இவ்வாறு சாஸ்திரிகளவர்கள் செய்துவரும் பேருதவிக்கு வையகமும் வானகமும் தகுந்த கைமாருகாது.

இந்நாட்களில், புஸ்தக வெளியீட்டுக்குள்ள காகிதப் பஞ்சம் யாவரும் அறிந்ததே. அவ்வாறிருந்தும், பராசக்தியின் அநுக்ரஹத்தால், சீக்கிரத்தில் இதை வெளியிடவேண்டுமென்ற ஊக்கம் மேலிட்டதின் பயனுய் நூலும் பூர்ணமாய் வெளிவந்துள்ளது. கற்றோரும் மற்றோரும் இதனுல் பயன் படவேண்டுமென்று ஜகன்மாதாவை ப்ரார்த்திக்கின்றேன்.

திருவல்லிக்கேணி
*24—3—1944*

**K. கைலாஸமய்யர்,**
பதிப்பாளர்.

# முகவுரை

ஆஸ்திகர்களே!

இந்த உலகத்தில் ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு விதமான சக்தியினுல் நிரம்பியது. ஒரு விதத்திலும் சக்தியில்லாத பொருளை யாரும் விரும்பமாட்டார்கள். கடவுளும் இந்த லோகத்தை ஸ்ருஷ்டிப்பதிலும், ரக்ஷிப்பதிலும் ஸம்ஹரிப்பதிலும், சக்தியின் ஸம்பந்தத்தைத்தான் எதிர்பார்க்கிருர் என்ற விஷயத்தை யாவரும் அறிந்ததே. இவ்விதம் மஹிமை தங்கிய சக்தியானது பலவாருகப் பிரிக்கப்பட்டு வெவ்வேறு பொருள் போல் தோன்றினுலும் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து, அகண்டமாகக் கவனித்தால் அந்த சக்தியேதான் எல்லாவற்றிற்கும் மேலான தத்வமென்பதை யாவரும் எளிதில் அறியக் கூடும். எந்த நூல்களிலும் எவ்விதமான கதாஸந்தர்ப்பங்களிலும் அந்தந்த வஸ்துவிலுள்ள சக்தியானது பூஜிக்கப்படுமன்னியில், சக்திக்கு ஆதாரமாகாதவனுன புருஷன் ஒருவராலும் மதிக்கப்படமாட்டான். ''நான் ரொம்பவும் அசக்தன்; என்னை யார் மதிப்பார்கள்?'' என்று அவரவர்களே ஒப்புக் கொள்ளுவார்கள். சக்தியின் மஹிமையைப் பற்றி வர்ணிக்கும் சந்தர்ப்பத்தில் இந்த க்ரந்தகர்த்தாவான ஜகத்குரு மஹாஸ்வாமிகளவர்களே புருஷரூபமான தேவதைகளுக்கு புக்தி முக்திகளைக் கைகளால்தான் கொடுக்க சக்தி உண்டு; சக்தி என்ற பரதேவதைக்கோ தனது பாதங்களாலேயே பக்தர்கள் விரும்பும் பலத்திற்கு மேலானதாகவே புக்தியையோ முக்தியையோ கொடுக்கும் வல்லமை உண்டு என்று வர்ணித்திருக்கிருர்கள். கைகளால் அபீஷ்டத்தைக் கொடுக்கும் தேவதைகளும், சக்தி அவர்களிடம் இருந்தால்தான், அதை அளிப்பார்கள் அன்னியில் சக்தி அற்றவர்களானுல் அவர்களால் கைகளால் ஒன்றையும் கொடுக்க முடியாது. சக்தி என்ற பரதேவதைக்கோ பக்தனுடைய அபீஷ்டத்தை, தான் அளிக்க மற்றவர்களுடைய உதவி வேண்டாம். தன்னுடைய ஸ்ரீபாதத்தை தர்சனம் செய்தவர்களுக்கு அந்த பாதகமலங்களிலிருந்தே அதிகமாக புக்தி முக்திகளை வர்ஷிக்கின்ருள். இதை கவனித்தால், சக்தி என்ற பரதேவதையே எல்லாவற்றிற்கும் மேலான தேவதை என்பதை யார்தான் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.



சாஸ்த்ர ரத்னாகரம்

தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியாள்

தவிர, ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸுக்ரீவனும் ஸ்ரீராமனும் ஸக்யம் செய்துகொண்ட பிறகு, ஸ்ரீராமன் தன் வ்ருத்தாந் தத்தை ஸுக்ரீவனுக்குச் சொல்லவும், ஸுக்ரீவன் தன் வ்ருத் தாந்தத்தை ஸ்ரீராமனுக்குச் சொல்லி வருவதுமான ஸந்தர்ப் பத்தில், ஸுக்ரீவன் ராமனைப் பார்த்து, ''ஸ்வாமின் கொஞ்ச காலத்திற்கு முன்பாக ராவணன் ஓர் உத்தம ஸ்திரீயை அபஹ ரித்துக் கொண்டு புஷ்பக விமானத்தில் தன் நகரத்திற்குச் சென்று கொண்டிருந்தான். நாங்கள் இந்த ரிச்யமுக பர்வதத் தினுடைய சிகரத்தில் எப்பொழுதுமே வசித்து வரும் காரணத்தால், அக்காலத்திலும் நாங்கள் இங்கு இருந்தோம். புஷ்பக விமானத்தையும் கவனித்துப் பார்த்தோம். விமானத்தி லிருந்த ஸ்திரீயானவள் எங்களைக் கவனித்ததும் எங்கள் மத்தி யில் ஒரு பீதாம்பரத்தில் சில வஸ்துக்களைக் கட்டி கீழே போட் டாள். அதை நாங்கள் அவிழ்த்துப் பார்த்தபொழுது விலை மதிக்க முடியாததான அநேக ஆபரணங்கள் அதில் இருந்தன. உடன் அதை அந்த வஸ்த்ரத்திலேயே முடிந்து மிகவும் பயத்து டன் ரக்ஷித்து வருகிறோம். இதோ அந்த வஸ்து இருக்கிறது. தாங்கள் அதை அவிழ்த்துப் பார்க்கலாம். அதிலுள்ள ஆபர ணங்கள் ஸீதையினுடையதானால் அன்று ராவணன் புஷ்பக விமானத்தில் அபஹரித்துச் சென்ற ஸ்திரீ, ஸீதைதான் என்று நிச்சயம் செய்துவிடலாம்'' என்று சொல்லிவிட்டு அந்தப் பொருள்களை ராமனிடம் காண்பித்தான்.

ஸ்ரீராமனும் ஸீதாதேவியினுடையதுதான், என்று அறிந் தவரானாலும் அதை, தான் தீர்மானிக்காதவர்போல் நடித்துக் கொண்டு லக்ஷ்மணஸ்வாமியைப் பார்த்து, ''லக்ஷ்மணா! இந்த ஆபரணங்கள் ஸீதையினுடையதுதானா'' என்று கேட்டார். லக்ஷ்மணனோ தேவியின் பாதத்தில் அலங்கரிக்கப்பட்டு வந்த பாதஸரத்தை மாத்ரம் ஸீதையினுடையதுதான் என்பதை நிச் சயமாகச் சொன்னார். முகத்திலோ, கைகளிலோ அலங் கரிக்கப்பட்டு வந்த ஆபரணங்களைப் பற்றித் தனக்கு தெரியாது என்றும் சொல்லிவிட்டார். இவ்விதம் சொன்ன லக்ஷ்மண னைப் பார்த்து ஸ்ரீராமனும், ''லக்ஷ்மணா! பாதஸரத்தை மாத்ரம் நீ அறிந்திருக்கின்றாயே, மற்ற ஆபரணங்களை ஏன் அறிந்து கொள்ளவில்லை அதன் காரணம் என்ன?'' என்று கேட்க, லக்ஷ்மண ஸ்வாமியும் ராமனைப் பார்த்து, ''அண்ணா! நான் ஸகலவிதமான புருஷார்த்தங்களையும் அடைய பராசக்தியான தேவியினுடைய பாதார விந்தங்களை தர்சனம் செய்யும் வழக்கமாகையால் அங்கு அலங்கரிக்கப்பட்ட பாதஸரத்தை நான் அறிந்தேன். தேவியினுடைய மற்ற ப்ரதேசங்களில் என்னுடைய த்ருஷ்டிக்கு ஸஞ்சாரம் ஏற்பட காரண

மில்லாததினால் அந்த ப்ரதேசங்களில் அலங்கரிக்கப்பட்ட
ஆபரணங்களைப் பற்றி நான் எவ்விதம் அறிய முடியும்?'' என்று
சொல்லி விட்டார்.

இதனால் தேவியினுடைய சரணாரவிந்தத்தின் மஹிமை
யானது ஸ்பஷ்டமாக ப்ரகாசிக்கின்றதல்லவா! ஸ்ரீமத்ராமா
யணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் இக்கதையானது ஸ்பஷ்ட
மாக ப்ரகாசிக்கின்றது. இந்த ஒரு உதாஹரணமே சக்தி தத்வம்
மேலானது என்பதற்கு ப்ரமாணமாகப் போதாதா. ஸ்ரீராமச்
சந்த்ர மூர்த்தியே அயோத்யா நகரத்தில் அச்வமேத மஹா
மண்டபத்தில் குசலவாள் திவ்ய வீணையுடன் ஸ்ரீராமகதையை
கானரூபமாக ப்ரவசனம் செய்து கொண்டு வரும் ஸமயத்தில்
இந்த சரித்ரம் தனக்கும் ச்ரேயஸ்ஸைக் கொடுக்கக்கூடியது
என்பதை பஹிரங்கமாக மஹாஜனங்களுக்கு ப்ரகாசப்படுத்தி
இருக்கிறார். ஸ்ரீமத் ராமாயணத்தில் தனக்கு ப்ராதான்யம்
இல்லை என்பதை ஸ்ரீராமனே அங்கீகரித்து விட்டார். தனக்கு
அந்த நூலில் ப்ராதான்யம் இருந்தால் தன்னுடைய சரித்ரம்
தனக்கு ச்ரேயஸ்ஸைக் கொடுக்கக்கூடியது என்று ராமனே
சொல்லுவாரா? அப்படியானால் அது ஆத்ம ச்லாகனையாக
ஆகின்றபடியால் சாஸ்த்ர விருத்தமாக ஆகும். ஆகையால்
தனக்கு ப்ராதான்யத்தை ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராமன்
ஒப்புக்கொள்ளவில்லை. ஸீதா தேவிக்குத்தான் ப்ராதான்
யத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்.

ராமாயணம் என்று அந்த நூலுக்குப் பெயர் ஏற்பட்டா
லும், ஸீதையினுடைய சரித்ரம் என்றுதான் வால்மீகி மஹர்ஷி
யும் அந்த நூலுக்கு நாமகரணம் செய்திருக்கிறார். இவ்விதம்
ஸ்ரீமத் ராமாயணத்தில் முன் பின் கதா ஸந்தர்ப்பங்களை கவனித்
துப் பார்த்தால் சக்தியினுடைய மஹிமைதான் விளங்கி வரு
கிறது. ஸ்ரீமத் ராமாயணம் மாத்ரமல்ல; மற்ற எந்த இதிஹாச
புராணங்களையும் ஸ்ம்ருதிகளையும், வேதங்களையும் ஆராய்ச்சி
செய்து பார்த்தாலும் ஆங்காங்கு சக்திக்கே ப்ராதான்ய
மானது ப்ரகாசிக்கின்றது. லோகங்களிலோ, இது
ப்ரஸித்தமானதே. ஒரு க்ருஹத்தில் க்ருஹிணீ என்ற ஸ்த்ரீ
களுக்கு சாஸ்த்ர விருத்தமில்லாததான அம்சங்களில் ப்ராதான்
யத்தைக் கொடுத்தாலொழிய க்ருஹக்ருத்யம் ஸரிவர நடை
பெறாது. அதுபோல் ஜகத்க்ருத்தியத்திலும் கடவுளும் சக்தியை
ப்ரதானமாக வைத்துத்தான் ஒரு கார்யத்தை செய்ய முன்
வருகிறார். லோகத்தை ஸ்ருஷ்டிக்கவோ, பரிபாலிக்கவோ
ஸம்ஹரிக்கவோ, பராசக்திக்கு இச்சை ஏற்படும்பொழுது
இந்த மூன்று கார்யத்தையும் நிர்வாஹம் செய்ய தேவியே

தன் கடாக்ஷத்தால் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், முதலான தேவதைகளை ஸ்ருஷ்டிக்கிருள் என்றும் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

தேவியினுடைய பெருமையைப் பற்றி யாரும் ''இவ்வளவு தான்'' என்று வர்ணிக்கமுடியாது. ஸகலலோகத்திற்கும் சாச்வதமான தாயாராக ஆகிருள் என்பதும், லோகம், வேதம், இவைகளில் ப்ரஸித்தமானது. தாயினிடம் பக்தி இல்லாத ப்ராணிகள் ப்ராணிகளாகவே ஆகமாட்டார்கள். ஆகையால் ஸர்வ ஜனங்களுக்கும் அழிவற்ற தாயாரான பராசக்தியினிடம் மேலான பக்தி ஏற்படவேண்டியது அவச்யமானது என்பதை உத்தேசித்து தேவியினுடைய மஹிமையை ப்ரகாசம் செய்ய ஜகத்குருவான பரமாசார்யாள் இந்த க்ரந்தத்தை இயற்றினுர்கள். அவர்கள் செய்த ஸ்தோத்ர க்ரந்தங்களுக்குள் இந்த க்ரந்தமானது மிகவும் மேலானது.

இந்த க்ரந்தத்தை படித்துவரும் வழக்கமுள்ளவர்களுக்கு தேவியானவள் ஸகல கல்விகளிலும் அபூர்வமான பயிற்சியையும், தேவர்களாலும் பூஜிக்கக்கூடிய தன்மையையும், தேவியே கொடுத்து அனுக்ரஹம் செய்கிருள். மூகாம்பிகா க்ஷேத்ரத்தில் ஒரு ஊமையும், செவிடும் அஞ்சலிபந்தமாத்ரத்தால் மஹாகவிகளாக ஆனுர்கள் என்பதும் ப்ரஸித்தமானது. இத்துடன் தென்மொழியில் மஹாவித்வானுன ஸம்பந்தமூர்த்தி வடமொழியில் மஹாவித்வானுன காளிதாஸன் முதலான மஹான்களோ முக்யமாக இந்த க்ரந்தத்தையே இயற்றிய ஜகத்குருவோ லோகங்களில் நிகரற்ற மான்யதையை தேவியினுடைய அனுக்ரஹத்தால் அடைந்திருக்கிருர்கள் என்பதும் ப்ரஸித்தமானது.

நமது லோகத்திற்கும் வாழ்க்கைக்கும் இந்த நூலை ஓர் அபூர்வமான கல்பவ்ருக்ஷமாக பூலோகத்தில் ஸ்தாபனம் செய்வதற்காகவே மஹாகைலாசத்திற்கு அதிபதியான சாக்ஷாத் பரமேச்வரனே கேரள க்ஷேத்திரத்தில், சிவகுரு, ஆர்யாம்பாள் என்ற திவ்ய தம்பதிகளை ஒரு நிமித்தமாக வைத்துக்கொண்டு சங்கரபகவத்பாதாள் என்ற ப்ரஸித்தமான திருநாமத்துடன் அவதரித்தார்கள் என்பதையும் வித்வான்கள் அறியக்கூடும். அவர்களால் இயற்றப்பட்ட இந்த க்ரந்தத்தைத்தான் கல்பவ்ருக்ஷமாக வைத்துக்கொண்டு மற்ற நூல்களை இந்த வ்ருக்ஷத்தின் பத்ரங்களாகவும், புஷ்பங்களாகவும், காய்களாகவும், கனிகளாகவும், சாகைகளாகவும், உபசாகைகளாகவும், பாவிக்க வேண்டும்.

இவ்விதமிருக்க இந்த நூலை ஒவ்வொரு ச்லோகமாகப் படித்து தேவியை ஸந்தோஷிக்கச் செய்கிறவர்களுக்கு ஸர்வ

ஸௌபாக்யமும் ஏற்படும் என்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமே இல்லை. ரோக நிவ்ருத்தியிலோ துர்தேவதைகளை விரட்டுதல்களிலோ, சத்ருக்களை ஜயிப்பதிலோ, கல்வி பயிற்சியை அடைவதிலோ, அபம்ருத்யுவை பரிஹாரம் செய்து கொள்வதிலோ, ஸகலவிதமான அரிஷ்டத்தையும் பரிஹாரம் செய்து கொள்வதிலும், ஸகலவிதமான இஷ்டங்களையும் அடைவதிலும், இந்த நூலைப்போல் ஒவ்வொரு க்ருஹத்திலும் இருந்து வரவேண்டிய சிந்தாமணி வேறு ஒன்றுமே இல்லை. ஆகையால் ஸகல ஜனங்களும் ஸ்தோத்ர க்ரந்த பாராயண மூலமாக ஸகலவிதமான அரிஷ்ட நிவ்ருத்தியை ஸம்பாதித்துக் கொண்டு மேன்மேலும் ஸௌபாக்யத்துடன் கூடினவர்களாக ஆவார்கள் என்ற விஷயத்தில் **தப்தபரசுக்ரஹண** மூலமாக சபதம் செய்யலாம்.

ப்ரும்மவித்யாரூபிணியான பராம்பிகையின் பரதத்வத்தை போதிக்கின்ற இந்த ஸ்தோத்ர க்ரந்தத்தை பாராயணம் செய்து, அதனால் தேவியை ஸந்தோஷிக்கச் செய்கிறவர்களுக்கு பராசக்தியே நேரில் ஆவிர்பவித்து வித்யாதானம் செய்கிறபடியால், ஸகலவிதமான வித்யைக்கும் மூலபூதமான தேவியினுடைய நிலயமான இந்த ஸ்தோத்ர க்ரந்தத்தை கேவலம் மர்த்யர்களான ஜனங்களுக்கு எதிரில் ப்ரகாசப்படுத்திய ஸ்ரீசங்கர பகவத்பாதாளுடைய திவ்ய பாதபத்மங்களில் பரமபக்தியுடன் இந்த ஸ்தோத்ர க்ரந்தத்தைப் பாராயணம் செய்து ப்ரும்மவித்யா ரூபிணியான பராம்பிகையினுடைய திவ்ய தர்சனத்திற்கு யோக்யமான ஜன்மாவே ஸபல ஜன்மாவாக ஆகும் என்பதை ஸகல புண்ய ஜனங்களும் அறிந்து பரமாசார்யாளுடைய அனுக்ரஹத்திற்கும் பராம்பிகையினுடைய அனுக்ரஹத்திற்கும் பாத்ரபூதராவார்களாக.

**தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரியள்.**

# விஷயக் குறிப்பு

| ச்லோகம் | விஷயம் | பக்கம் |
|---|---|---|

| ச்லோகம் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| 65 | தேவியின் நிர்மால்ய மஹிமை | 211 |
| 66 | அம்பாளுடைய வாக் விலாஸ வர்ணனே | 218 |
| 67 | தேவியினுடைய முகவாய்க் கட்டையின் வர்ணனே | 220 |
| 68 | தேவியினுடைய கண்ட (கழுத்து) பாக வர்ணனே | 222 |
| 69 | தேவியினுடைய கண்டதேசத்தில் காணப் படும் த்ரிவளீ என்று சொல்லப்படும் ஸூக்ஷ்மமான மூன்று ரேகைகளின் வர்ணனே | 224 |
| 70 | தேவியினுடைய சதுர் புஜங்களின் வர்ணனே | 227 |
| 71 | தேவியினுடைய கை விரல்களுடைய நகங்களின் வர்ணனே | 229 |
| 72 | தேவியினுடைய ஸ்தனங்களின் வர்ணனே | 230 |
| 73 | தேவியினுடைய ஸ்தனங்களின் வர்ணனே | 232 |
| 74 | அம்பாளுடைய இரண்டு ஸ்தனங்களுடைய மத்ய ப்ரதேச வர்ணனே | 235 |
| 75 | லோகமாதாவான பரதேவதையினுடைய ஸ்தனப் பாலின் வர்ணனே | 237 |
| 76 | தேவியினுடைய நாபியின் வர்ணனே | 240 |
| 77 | தேவியினுடைய இடுப்புப் ப்ரதேசத்தில் ஸூக்ஷ்மதர்சிகளுக்குப் புலப்படும் அதி ஸூக்ஷ்மமான ரேகையைப் போலொத்த ரோம வரிசைகளின் வர்ணனே | 242 |
| 78 | தேவியினுடைய நாபியின் வர்ணனே | 245 |
| 79 | தேவியினுடைய இடுப்பு ப்ரதேச வர்ணனே | 247 |
| 80 | தேவியினுடைய மத்யப்ரதேச வர்ணனே | 249 |
| 81 | தேவியினுடைய கடிபச்சாத் பாக (பின்பாக) வர்ணனே | 251 |
| 82 | தேவியினுடைய துடை, முழங்கால்களின் வர்ணனே | 253 |
| 83 | தேவியினுடைய ஜங்கா என்ற (முழங் கலூக்குக் கீழ், பாதத்திற்கு மேல்பாகம்) சப்தத்தால் சொல்லப் படுகிற ப்ரதேசத் தின் வர்ணனே | 255 |
| 84 | தேவியினுடைய பாதார விந்த வர்ணனே | 257 |
| 85 | தேவியின் பாதார விந்தங்களின் வர்ணனே | 260 |
| 86 | தேவியினுடைய பாதார விந்தங்களின் மஹி மையின் வர்ணனே | 262 |
| 87 | தேவியினுடைய பாதார விந்தங்களுடைய வர்ணனே | 265 |
| 88 | தேவியினுடைய பாதங்களின் அக்ரபாக வர்ணனே | 267 |




# ஸௌந்தர்யலஹரீ



भूमौ स्खलितपादानां भूमिरेवावलम्बनम्
त्वयि जातापराधानां त्वमेव शरणं शिवे ॥

பூமௌ ஸ்கலிதபாதாநாம் பூமிரேவாவலம்பநம் ।
த்வயி ஜாதாபராதாநாம் த்வமேவ சரணம் சிவே ॥

## 1. பராசக்தியின் உத்கர்ஷம்

शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ।
अतस्त्वां आराध्यां हरिहरविरिञ्चादिभिरपि
प्रणन्तुं स्तोतुं वा कथमकृतपुण्यः प्रभवति ॥ १ ॥

சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்
ந சேதேவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திதுமபி ।
அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி
ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதமக்ருதபுண்ய: ப்ரபவதி ॥ 1 ॥

பதவுரை:—

(हे! मातः - ஹே! மாத: = ஹே தாயே - यतः - யத: = எந்தக் காரணத்தினால்) - शिवः - சிவ: = பரமசிவன் (त्वया) शक्त्या - (த்வயா) சக்த்யா = பராசக்தியாகிய உன்னுடன் युक्तः यदि - யுக்த: - யதி = சேர்ந்துகொண்டிருப்பாரேயானல்

**प्रभवितुं** - ப்ரபவிதும் = உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலான கார்யத்தைச் செய்வதற்கு **शक्तः** - சக்தः = ஸாமர்த்ய முள்ளவராக **भवति** - பவதி = ஆகிருரோ **देवः** - தேவ: = அந்தப் பரமசிவக்கடவுள் **एवं** - ஏவம் = முன் சொன்னபடி பராசக்தி யாகிய உன்னேடு கூடினவராக **न चेत्** - ந சேத் = இல்லாத சமயத்தில் **स्पन्दितुं अपि** - ஸ்பந்திதும் அபி = (தான்) அசைவதற் குக்கூட **कुशलः** - குசல: = ஸாமர்த்யமுள்ளவராக **न खलु भवति** - ந கலு பவதி = ஆகமாட்டாரல்லவா? **अतः** - அதः = அக்காரணத் திஞல் **हरिहरविरिञ्चादिभिः अपि** - ஹரிஹரவிரிஞ்சாதிபி: அபி = விஷ்ணு ருத்ரன், ப்ரும்மா முதலான தேவர்களாலும்கூட **आराध्यां** - ஆராத்யாம் = பூஜிக்கத்தகுந்தவளான **त्वां** - த்வாம் = உன்னை **अकृतपुण्यः** - அக்ருதபுண்ய: = சென்ற ஜன்மாக்களில் அளவிடக் கூடாத புண்யத்தைச் செய்யாதவன் **प्रणन्तुं** - ப்ரணந்தும் = நமஸ்காரம் செய்வதற்கோ **स्तोतुं वा** - ஸதோதும் வா = வாக்கிஞல் ஸ்துதிப்பதற்கோ **कथं** - கதம் = எப்படி **प्रभवति** - ப்ரபவதி = ஸாமர்த்யமுள்ளவஞக ஆவான்?

தாத்பர்யம்:—

*இந்த ச்லோகத்திஞல் பராசக்தியான ஜகன்மாதா பர தேவதை ஸகல தேவதைகளுக்குள் உத்க்ருஷ்டமான தேவதை என்று ஸ்ரீ சங்கர பகவத்பாதாளால் புகழப்படுகிருள்.*

*அந்த பரதேவதையினுடைய ஸாந்நித்யரூபமான ஸம்பந்தம் இல்லாதபோஞல், ஸகல வேதங்களால் சொல்லப்படும் பரம சிவன் என்ற ப்ரும்மத்துக்கும் யாதொருவிதமான கார்யத்தைச் செய்வதிலும் ஸாமர்த்யம் ஏற்படுகிறதில்லை. பராசக்தியோடு பரமசிவன் கூடியிருக்கும்போதுதான், உலகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்ற ஐந்துவிதமான கார்யங்களையும் செய்து தன்னிடத்திலுள்ள ஈச்வரத்வம் என்ற தன்மையை அவர் ப்ரகடனம் செய்துகொள் கிருர். இதஞல் எந்த தேவியினுடைய ஸம்பந்தத்திஞல்தான் பரம்பொருளாகிய பரமசிவனுக்குக்கூட ஜகத் காரணத்வம் என்ற தன்மையானது ஸித்திக்கிறதோ, அந்த தேவியானவள் தான் மேலான தெய்வம் என்பதற்கு வேறு காரணத்தையும் நிரூபிக்கவேண்டுமோ!*

*இதஞல் அந்த தேவியானவள் ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரும்மா, ஸ்திதிகர்த்தாவான விஷ்ணு ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரன் என்ற த்ரிமூர்த்திகளென்ன, இந்த்ரன் முதலான எட்டு*

திக்பாலகர்களென்ன, மற்றுமுள்ள தேவர்களென்ன, எல்லா தேவர்களுக்கும்கூட பூஜிக்கத் தகுந்த தேவதையாக ஆகிருள். சென்ற அநேக ஜன்மாக்களில் அளவிடமுடியாத தவத்தைச் செய்தவர்கள்தான், பராசக்தியான தேவியை காயிகபக்தியாகிற நமஸ்காராதிகளாலோ, வாசிக பக்தியாகிற ஸ்தோத்ரங்களாலோ, மானஸிக பக்தியாகிற த்யானுதிகளாலோ ஆராதித்து ஜன்மஸாபல்யத்தை அடைய முயற்சி செய்வார்கள். ஸுக்ருதம் என்ற தவத்தைச் செய்யாதவர்களுக்கு, இந்த தேவியினுடைய விஷயத்தில் பூஜிக்கவேண்டுமென்று மனம் வருவது ரொம்பவும் அரிதுதான். ஸாக்ஷாத் பரமசிவனுடைய திரு அவதாரமாகவோ அல்லது இனி ஜன்மா எடுக்கக்கூடிய கர்மா இல்லாமல் ஸகல கர்மாக்களையும் அனுபவித்து ஒழித்தவனுகவோ இருக்கும் புண்ய ஜனத்துக்குத்தான் பராசக்தியினுடைய பூஜையிலோ அவளுடைய மஹிமையை விளக்கிக் காட்டுகிற மஹாமந்த்ராதிகளை குருமுகமாக உபதேசம் செய்துகொண்டு ஜபம் செய்வதிலோ அதிகாரம் ஏற்படும். அதில்,

यदि वा पश्चिमं जन्म यदि वा शङ्करः स्वयम् ।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ॥

யதி வா பச்சிமம் ஜந்ம யதி வா சங்கரః ஸ்வயம் ।
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத்பஞ்சதசாக்ஷரீ ॥

என்ற சாஸ்த்ரமே ப்ரமாணமாகும்.

ஆகையால் ரொம்பவும் அரிதான மானிட ஜன்மாவை அடைந்தவர்கள் ஸர்வலோகத்திற்கும் மாதாவான பராசக்தியென்ற பரதேவதையை உபாஸிக்கவேண்டியது மிகவும் அவச்யமாகும் என்பதுதான் மேற்சொன்ன ச்லோகத்தின் முக்யமான தாத்பர்யமாகும்.

## 2. பராசக்தியின் [பாததூளி மஹிமை

तनीयांसं पांसुं तव चरणपङ्केरुहभवं
विरिञ्चिः संचिन्वन् विरचयति लोकानविकलम् ।
वहत्येनं शौरिः कथमपि सहस्रेण शिरसां
हरः संक्षुद्यैनं भजति भसितोद्धूलनविधिम् ॥ २ ॥

தநீயாம்ஸம் பாம்ஸூம் தவ சரணபங்கேருஹபவம்
விரிஞ்சி: ஸம்சிந்வன் விரசயதி லோகாநவிகலம் ।
வஹத்யேநம் செளரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்
ஹர: ஸம்க்ஷூத்யைநம் பஜதி பஸிதோத்தூலநவிதிம் ॥ 2 ॥

பதவுரை:—

हे! भगवति - ஹே! பகவதி = ஹே பரதேவதையே विरिञ्चिः - விரிஞ்சி: = ப்ரும்மா तव - தவ = உன்னுடைய चरणपङ्केरुहभवं - சரணபங்கேருஹபவம் = தாமரைப்பூவைப்போலொத்த உன் பாதங்களிலிருந்து உண்டானதாயும் तनीयांसं - தநீயாம்ஸம் = ரொம்பவும் ஸூக்ஷ்மமாயுமுள்ள पांसुं - பாம்ஸூம் = (புழுதியை) தூளியை संचिन्वन्-ஸம்சிந்வன் =சேர்த்துத் திரட்டி लोकान्-லோகாந் = பூராதி ஸப்த லோகங்களென்ன, அதலம் முதலான ஸப்த லோகங்களென்ன ஆக 14 லோகங்களையும் अविकलं - அவிகலம் = ஒன்றுக்கொன்று நெருங்காமல் விசாலமாக இருக்கும்படி विरचयति - விரசயதி = ஸ்ருஷ்டிக்கிறார் तथा - ததா = அப்படியே शौरिः - செளரி: = ஆதிசேஷனுடைய ரூபமாக விளங்கிவரும் விஷ்ணு एनं - ஏநம் = 14 லோகங்களாகப் பிரிக்கப்பட்டு வருகிற உன் பாததூளியை शिरसां सहस्रेण - சிரஸாம் ஸஹஸ்ரேண = தனது ஆயிரம் தலைகளினாலே कथमपि - கதமபி = மிகவும் ப்ரயாஸத்துடன் वहति - வஹதி = தாங்கிக்கொண்டு ரக்ஷிக்கிறார் तथा - ததா = அப்படியே हरः - ப்ரளயகாலத்தில் ஸகல ப்ரபஞ்சத்தையும் ஸம்ஹரிக்கிற ருத்ரனும் एनं - ஏநம் = இந்த லோகமாக விளங்கிவரும் உன் பாததூளியை संक्षुद्य - ஸம்க்ஷூத்ய = நன்றாகப் பொடி செய்து भसितोद्धूलनविधिं - பஸிதோத்தூலந விதிம் = விபூதியினால் செய்துகொள்ளவேண்டிய உத்தூலனம் என்ற அனுஷ்டானத்தை भजति - பஜதி = ஸேவிக்கிறார் (செய்கிறார்).

தாத்பர்யம்:—

*இந்த ச்லோகத்தினால் ஸாக்ஷாத் ராஜராஜேஸ்வரியான பரதேவதையினுடைய திரு பாதங்களில் ஸம்பந்தப்பட்ட புழுதியாகிற தூளியின் மஹிமையானது சொல்லப்படுகிறது.*

*அதாவது ஸர்வேச்வரியான ஜகன்மாதா தனது பொற்பாத கமலங்களால், தனது ஸ்ரீபுரம் என்ற நகரத்தின் உத்யான வனத்தில் ராஜயோகிகளுடைய ஸங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட திவ்ய பூமியில் மந்த மதியாக நடந்துகொண்டு ஸகிகளுடன்*

ஆநந்தமாக விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது, சதுர்முகனுன ப்ரும்மா ஒரு ஸமயம் அந்தப் பரதேவதையை தர்சனம் செய்யும்படியான பாக்யவானுக ஆனுர். அப்படி தேவியினுடைய தர்சனத்தைச் செய்து தனது ஜன்மாவைப் பரிசுத்தமாகவும் செய்துகொண்ட பிற்பாடு அந்த அம்பாள் நடந்துவந்த ப்ரதேசத்திலுள்ள புழுதித்துளிகளை தான் ஸ்வீகரித்துக்கொண்டு, அதினின்றும் பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநலோகம், தபோலோகம், ஸத்யலோகம் என்ற மேல் லோகங்களாகிய ஏழு லோகங்கள் என்ன, அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதாள என்ற கீழ் லோகங்களாகிய ஏழு லோகங்கள் என்ன, ஆக பதிநான்கு லோகங்களையும் ஸ்ருஷ்டித்து, லோகத்திற்கு தான் **ஸ்ருடிகர்த்தா** என்ற மேன்மையை அடைந்தார்.

அதுமாத்ரமல்ல, இந்த லோகங்களெல்லாம் ஸ்ரீ தேவியின் பாததூளியின் அம்சம் என்று அறிந்து அந்த உலகத்தில் ஒரு மான்யதா புத்தியையும் வைத்து மஹாவிஷ்ணு தான் ஆதிசேஷன் என்ற ஸர்ப்ப ராஜாவின் உருவத்தையும் எடுத்துக்கொண்டு தனது ஆயிரம் தலைகளால் மேற்சொன்ன உலகங்களைத் தாங்கிக்கொண்டு **ஸ்திதிகர்த்தாவாக** ரக்ஷித்து வருகிருர்.

இதை அறிந்த ருத்ரனே, ப்ரும்மாவுக்கும், விஷ்ணுவுக்கும் ஸ்ரீ ராஜ ராஜேச்வரியினுடைய பாத தூளி கிடைத்ததே, நாம் அதை அடைய பாக்யமில்லாதவனுக ஆகிவிட்டோமே என்று நினைத்து, மஹா ப்ரளய காலத்தில், ஸம்ஹார க்ருத்யத்தில் 'நான் கர்த்தாவாக ஆகிறேன்' என்று தீர்மானித்து அவ்விதமே ப்ரளய காலத்தில், மேலே சொல்லப்பட்ட பதிநான்கு லோகங்களாக விளங்கிவரும் அம்பாளுடைய பாததூளியை நன்ருக கையிலெடுத்து வைத்துக்கொண்டு "த்ரியம்பக" மந்த்ரத்தால் பொடியாக்கி தேவியினுடைய ப்ரஸாதத்தைத் தான் அடைவதற்காக, தன் பாதம் முதல் சிரஸ் வரையிலும் தனது சரீரத்தில் அந்த பஸ்மாவைப் பூசிக்கொண்டு தான் **ஸம்ஹாரகர்த்தாவாகி** பரதேவதையினுடைய த்யானத்தில் ஈடுபட்டிருந்தார்.

இதனுல் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற த்ரிமூர்த்திகளும் தேவியினுடைய பாத தூளியைப் பூஜை செய்து அதனுல், தாங்கள் ப்ராபல்யத்தையுமடைந்து, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற தங்களுக்குரிய கார்யங்களைச் செய்துவருகிருர்களே தவிர, ஸ்வயமாக அவர்களுக்கு ஏற்பட்ட ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களாகிற அவர்களுடைய கார்யங்களை வஹிக்க அவர்களுக்கு சக்தியில்லை என்று தெரிகிறது. தேவதைகளுக்குக்கூட அம்பாளுடைய பாத தூளியின் மஹிமையினுல்தான் ஸகலவிதமான ஸௌபாக்யங்களும் ஏற்படுகிறது என்பது திண்ணம்.

ஸகலமான குடும்பிகளுக்கும் ஆயுராரோக்ய ஐச்வர்யாபிவ்ருத்திக்கும், சத்ரு ஜயத்திற்கும் திவ்ய ஞானப்பிராப்திக்கும் பர தேவதையினுடைய பாதாரவிந்த தூளியின் பூஜையே மேலானதும் அவச்யமும் என்று அறியவும்.

ஆனல் தேவி அப்ரத்யக்ஷமாயிருக்கும்பொழுது நமக்கு அந்த அம்பாளுடைய பாதகமலம் ஸம்பந்தப்பட்டப்ரதேசம் தெரிந்து அதற்குப் பிறகு நாம் அந்த பாததூளியை அடைந்து பூஜிப்பது என்பது நமக்கு எப்படி ஸித்திக்கும் என்று எண்ணலாம். ஆகிலும் அந்த பாததூளியை அடைவதற்கும் ஒரு ஸுலபமான உபாயம் உண்டு. அதாவது, ஏதாவது ஒரு பௌர்ணமி தினத்தன்று ஒரு ஸுவாஸினீயை, ஸுவாஸினீ பூஜாவிதிக்ரமத்தை அனுஸரித்து, நாம் பூஜிக்க வேண்டும். நமது க்ருஹத்திற்குள் அந்த ஸுவாஸினீயை அழைக்கும்போது, நமது க்ருஹத்தின் வாசலிலிருந்து, ஸுவாஸினீ பூஜைக்காக அமைந்திருக்கும் பீடம் வரையிலும் நதியிலுள்ள மணலைக்கொண்டுவந்து வஸ்த்ரகாயம் செய்து பூமியில் அதை வாரியிறைத்து, அதன்மேல் அந்த ஸுவாஸினீயினுடைய பாதங்கள் படும்படியாக அழைத்துப் போகவேண்டும். பூஜாவிதிகள் முடிந்து ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளால் ஸுவாஸினீயை ஆராதித்து, அவள் அந்த குடும்பத்தார்களுக்கு ஆசீர்வாதம் செய்து வெளியில் போகும்பொழுதும் முன்போலவே அந்த மணல் பாதை வழியாகவே செல்லும்படி செய்யவேண்டும் அப்படியானல்,

**स्त्रियस्समस्ताः तव देवि भेदाः**

**ஸ்த்ரியஸ்ஸமஸ்தா: தவ தேவி பேதா:**

என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து, ஸ்த்ரீகள் தேவியினுடைய விபூதியானதினாலும் அதிலும், ப்ரக்ருதமாக பூஜிக்கப்படும் ஸுவாஸினீயிடத்தில் பூஜகனுக்கு தேவியினுடைய தாதாத்ம்ய பாவம் இருப்பதினாலும் அந்த ஸுவாஸினீயுடைய பாதங்களில் ஸம்பந்தப்பட்ட மணல் துளிகளை ஸாக்ஷாத் பரதேவதையினுடைய பாத கமலதூளிகளாகவே பாவிக்கவேண்டும். அந்த பாததூளிகளை ச்ரத்தையுடன் க்ரஹித்து தன்னுடைய சக்தி அனுஸாரம் சின்னதாக செய்யப்பட்ட பித்தளைப் பெட்டியிலோ வெள்ளிப் பெட்டியிலோ, தங்கப் பெட்டியிலோ அதை நிறைத்து வைத்துக்கொண்டு ஒவ்வொரு தினத்திலும் அந்தப் பெட்டியின் மீது தேவியின் பாததூளியை ஆவாஹனம் செய்து, ஷோடசோபசாராதிகளால் பூஜை செய்துவரவேண்டும். ஸ்ரீவித்யா பீஜாக்ஷரங்களினலே த்யானம், ஆவாஹனம் முதலான பூஜை உபசாரங்களைச் செய்வது அவச்யமாகும். வஸந்த ருதுவிலோ அல்லது சரத் ருதுவிலோ, ஸ்ரீவித்யா ஸாதகர்கள் ஒரு மண்ட

லத்திற்குக் குறையாமல், ஸாயங்காலமும் ப்ராதக்காலமும், இரு காலங்களிலும் இந்த பூஜையை செய்துவரவேண்டும். ப்ராதக் காலத்தில் பூஜையானவுடன்,

तनीयांसं पांसुं (தநீயாம்ஸம் பாம்ஸூம்)

என்ற ச்லோகத்தை ஆயிரம் ஆவர்த்திஜபமும், ஸாயங்கால பூஜை முடிந்தபின், அடுத்துவரும்,

अविद्यानां अन्तस्तिमिरमिहिरद्वीपनगरी

அவித்யாநாம் அந்தஸ்திமிரமிஹிரத்வீபநகரீ

என்ற ச்லோகத்தை ஆயிரம் ஆவர்த்தி ஜபமும் செய்து பூஜையை விதிவத்தாக முடிக்கவேண்டும். இவ்விதம் ஒரு மண்டலம் பூஜைசெய்து பூர்த்தியானவுடன், 9 ஸுவாஸிநீகளை அழைத்து ம்ருஷ்டான்ன போஜனம் செய்வித்து, வஸ்த்ரம், ஆபரணம், தக்ஷிணை, முதலானதுகளை தன் சக்திக்குக் குறையாமல் கொடுத்து, ஸந்தோஷமாக ஆராதித்தும், வ்ரதத்தை முடிக்கவேண்டியது. வ்ரததினமாகிய ஒவ்வொரு தினத்திலும் ப்ரும்மசர்யம் முதலான நியமங்கள் தவறுமல் இருக்க வேண்டும். அப்படியானல், அந்த பூஜகனை மஹாபுருஷன் பராம்பிகையினுடைய ப்ரஸாதத்திற்கு முக்ய பாத்ரனுக ஆகி ஸர்வ வித்யா பாரங்கதனும் அஷ்டைச்வர்ய ஸம்பன்னனும், புத்ரமித்ர களத்ராதி ஸம்பத்தோடு கூடினவனும், அகண்டமான கீர்த்தி மாலையினுல் அலங்க்ருதனும், சிரஞ்ஜீவியாயுமிருந்து விளங்கி வருவான்.

### 3. மோக்ஷப்ரதமான பாததூளி

अविद्यानां अन्तस्तिमिर मिहिरद्वीपनगरी
जडानां चैतन्यस्तबक मकरन्दस्रुतिझरी ।
दरिद्राणां चिन्तामणिगुणनिका जन्मजलधौ
निमग्नानां दंष्ट्रा मुररिपुवराहस्य भवति ॥ ३ ॥

அவித்யாநாம் அந்தஸ்திமிர மிஹிரத்வீபநகரீ
ஜடாநாம் சைதந்யஸ்தபக மகரந்தஸ்ருதிஜரீ ।
தரித்ராணும் சிந்தாமணிகுணநிகா ஜன்மஜலதௌ
நிமக்நாநாம் தம்ஷ்ட்ரா முரரிபுவராஹஸ்ய பவதி ॥ 3 ॥

பதவுரை: —

हे! भगवति - ஹே! பகவதி = ஹே! மஹா சக்தியே एषः - ஏஷ: = இந்த भवत्पादाब्जरेणुः - பவத்பாதாப்ஜரேணு: = உன்னுடைய பாததூளியானது अविद्यानां - அவித்யாநாம் = அக்ஞானிகளுக்கு अन्तस्तिमिरमिहिरद्वीपनगरी - அந்தஸ்திமிர மிஹிரத்வீப நகரீ = ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கிற மூல அக்ஞானமென்ற இருட்டுக்கு ஸூர்யன் உதிக்கும் ஸமுத்திரத்தின் நடுப்ரதேசமாகிய நகரமாக விளங்கிவருகிறதாயும் जडानां - ஜடாநாம் = மந்தபுத்தியுள்ளவர்களுக்கு चैतन्यस्तबकमकरन्दस्रुतिझरी - சைதந்யஸ்தபக மகரந்தஸ்ருதிஜரீ = ஆத்ம ஞானமாகிய கல்ப வ்ருக்ஷத்தினுடைய பூங்கொத்தின் ரஸத்தினுடைய பெருக்கை ப்ரவாஹிக்கச் செய்கிறதாயும் दरिद्राणां - தரித்ராணும் = ஏழைகளுக்கு चिन्तामणिगुणनिका - சிந்தாமணிகுணநிகா = ஸகல ஐச்வர்யத்தையும் கொடுக்கக்கூடிய சிந்தாமணி ரத்தினத்தின் ஸமூஹம்போல் விளங்கிவருகிறதாயும் जन्मजलधौ - ஜன்மஜலதௌ = பிறப்பாகிய ஸமுத்ரத்தில் निमग्नानां - நிமக்நாநாம் = மேலே வரமுடியாமல் மூழ்கிப் போகிறவர்களுக்கு मुररिपुवराहस्य - முரரிபுவராஹஸ்ய = யக்ஞவராஹ மூர்த்தியாக அவதாரம் செய்த மஹாவிஷ்ணுவினுடைய दंष्ट्रा - தம்ஷ்ட்ரா = தெத்திப்பல் போலும் भवति = விளங்குகிறது.

தாத்பர்யம் —

இந்த ச்லோகமும் முன் ச்லோகத்துடன் சேர்ந்துதான் ஒரே ப்ரயோகமாக ஆகும். இதனுலும் ஜகன்மாதாவான பரதேவதையினுடைய பாததூளிதான் ஸ்துதிக்கப்படுகிறது. ப்ராணிகளுக்கு ரொம்பவும் அவச்யமாக மானிட ஜன்மாவில் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டிய புருஷார்த்தங்களிலேயே முக்யமானது மோக்ஷமென்பதுதான். அந்த மோக்ஷத்தையோ, பரதேவதையினுடைய பாததூளியானது தன் பக்தர்களுக்கு வெகு ஸுலபமாகக் கொடுத்துவிடும். பிறப்பும் இறப்புமே **ஸம்ஸாரம்** என்று சொல்லப்படும். அது ஒரு கடலாகவும் வித்வான்களாலும், சாஸ்த்ரங்களாலும் வர்ணிக்கப்பட்டு வருகிறது. கடலுக்கு எப்படி கரையே இல்லையோ, அதன் ஆழத்தையும் எப்படி ஒருவராலும் கண்டுபிடிக்க முடியாதோ, அதுபோல் ஸம்ஸாரத்திற்கு கரையுமில்லை; இதனுடைய காம்பீர்யமும் இவ்வளவுதான் என்று யாராலேயும் அறியவும் முடியாது. அந்த தன்மையை அனுஸரித்து இந்த ஸம்ஸாரத்தையும்

ஸமுத்ரமாக வர்ணிக்கப்படுகிறது. ஸமுத்ரத்திலோ ஸகலமான ஜீவகோடிகளும் மூழ்கித் தபிக்கிறார்கள். மேல்வந்து மிதக்க முடியாமலும் மூழ்கிவிடுகிறார்கள். பொருளாசை, மண்ணாசை, பெண்ணாசை என்ற அநேகவிதமான பாசங்களாலும் கட்டப்பட்ட அவயவங்களோடும், மலம், மாயா, பாசம் என்ற மூன்று விதமான பெரிய கனமுள்ள கல்லோடுகூட சேர்த்துக் கட்டப்பட்டவர்களாயும் ஸ்வாதந்த்ரியத்தை இழந்து, காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறு திருடர்களால் இந்த ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தில் நன்றாகத் தள்ளி அமுக்கப்பட்டவர்களாக இருந்துகொண்டு ஜீவகோடிகளெல்லாம் கஷ்டப்பட்டு வருகிறார்கள். அவ்விதமான கஷ்டங்களிலிருந்தும் ஜீவகோடிகளை விமோசனம் செய்து வைப்பதில் ப்ரக்ருதத்தில் ஸ்துதிக்கப்படுகிற தேவதையான பராசக்தியினுடைய பாததூளியைப்போல் ஸாமர்த்யமுள்ளதான ஸாதனமே வேறொன்றும் லோகத்தில் கிடையாது. தேவியினுடைய பாததூளியை முன் ச்லோக தாத்பர்யத்தில் கூறப்பட்ட ப்ரகாரம் யார் உபாஸித்து வருகிறார்களோ, அவர்களுக்கு தேவியே ஸ்வப்னத்தில் ப்ரத்யக்ஷமாக ஆகி, ஞானஸம்பந்தமூர்த்தி முதலானவர்களுக்கு அருள் செய்ததுபோல், கடாக்ஷ தீக்ஷையினால் மோக்ஷஸாதனமான ஜீவப்ரும்ம ஐக்யஞானத்தை அந்த ஜீவர்களுடைய மனதில் உதிக்கும்படி செய்து அது மூலமாக ஜீவகோடிகளை முக்தர்களாகவும் கருணையினால் செய்கிறாள். ஆகையால் தேவியினுடைய பாததூளியின் பூஜை முமுக்ஷுக்களுக்கு (மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு) ரொம்பவும் அவச்யமானது. அந்த மஹிமையைத்தான், இந்த ச்லோகத்தினால், விஷ்ணுவினுடைய வராஹாவதாரத்தை த்ருஷ்டாந்தமாகக் காட்டிச் சொல்லப்பட்டது.

முன் காலத்தில் ஹிரண்யாக்ஷன் என்ற ஒரு அஸுரனால் பூமாதேவியானவள் அபஹரிக்கப்பட்டு ஸமுத்ரத்தில் முழுக்கடிக்கப்பட்டு பாதாளலோகம் கொண்டு போகப்பட்டாள். அந்த ஸமயத்தில், மஹாவிஷ்ணுவானவர், ஆதிவராஹாவதாரம் செய்து அந்த ஹிரண்யாக்ஷனையும் த்வம்ஸம் செய்து, தனது தெத்திப்பல்லினால் பூமாதேவியையும் எடுத்துத் தூக்கிக்கொண்டு வந்து, யதாபூர்வமாக ஸ்தாபித்து லோகத்திற்கு உபகாரம் செய்தார். இந்த கதையானது ஸ்ரீமத் பாகவதம் முதலான க்ரந்தங்களில் ப்ரஸித்தமாக விளங்கும். அதுபோல் ஜீவ ஸமூஹமானது காமன் என்ற ஹிரண்யாக்ஷனால் அபஹரிக்கப்பட்டு ஸம்ஸார ஸமுத்ரத்தினுடைய அடிபாகத்திற்கு கொண்டு போகப்பட்டிருக்கிறது. அந்த விஷயத்தில் தேவியினுடைய

பாததூளியானது, வராஹாவதாரம் செய்த மஹாவிஷ்ணுவினுடைய தெத்திப்பல்போல் விளங்கி வருகிறது என்று சொல்லப்பட்டபடியால், மோக்ஷத்தை அடைவதற்கு முமுக்ஷுக்களுக்கு அம்பாளுடைய பாத தூளியே பரம உபாயமாகும் என்பது வெளியாகிறது.

முமுக்ஷுக்களுக்கு மட்டுமல்ல, புபுக்ஷுக்களுக்கும் (போகத்தை இச்சிக்கிறவர்களுக்கும்) தேவியினுடைய பாத தூளியேதான் ஸேவிக்கத் தகுந்ததாக ஆகிறது. ஸ்வர்க்கலோகத்தில் **சிந்தாமணி** என்ற ஒரு ரத்ன **விசேஷம்** உண்டு. அது தன்னருகில் வந்தவர்களுக்கு அளவற்ற பொருளைக் கொடுப்பதோடும்கூட ஒவ்வொரு தினத்திலும் தான் அளவற்ற பொருளை உண்டுபண்ணி, அவ்விதமான பொருளாலேயே அந்த ஸ்வர்க்கத்தை நிரப்பிவிடும். அந்த சிந்தாமணி ரத்னத்திற்கு அவ்வளவு விசேஷமானது சாஸ்த்ரங்களால் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல்தான் தேவேந்த்ரனுக்கும் விசேஷ பெருமை ஏற்படுகிறது. இந்த பூலோகத்தில்கூட ஒரு ஸமயம் **"ஸத்ராஜித்"** என்ற ஒரு மஹானுபாவன் ஸூர்யனை உபாஸித்து, அந்த உபாஸனுபலமாக சிந்தாமணி என்ற ரத்ன ஜாதியில் சேர்ந்த **"ஸ்யமந்தகமணி"** என்ற ஒரு ரத்ன விசேஷத்தை ஸூர்யன் மூலமாக வாங்கிக்கொண்டு, குபேரனுக்கும் குபேரனுக விளங்கிவந்தான். அவனுடைய ஸம்பத்தைப் பார்த்து, லக்ஷ்மீபதியான மஹாவிஷ்ணுவின் திரு அவதாரமாகிய ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மாவுக்கும்கூட ஒரு பெரிய ஆச்சர்யம் உண்டாயிற்று என்று ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சிந்தாமணி என்ற ரத்ன விசேஷத்திற்கு அவ்வளவு பெருமை உண்டு. அம்பாளுடைய பாததூளியோ, சிந்தாமணி என்ற ரத்ன விசேஷங்களுடைய கூட்டமாக விளங்கி வருகிறது. ஒன்று, இரண்டல்ல, அநேக சிந்தாமணி ரத்னங்களுக்கு ஸமானமாகும் அம்பாளுடைய பாததூளி. அதை உபாஸிக்கிறவர்களுக்கு ஸகல ஸௌபாக்யமும் உண்டாகுமென்பதில் ஆக்ஷேபணையே இல்லை. ரொம்பவும் ஏழையான குடும்பிகள் தனது குடும்ப பரணத்திற்காக வீணுக என்னென்னவோ உபாயங்களைச் செய்கிறார்களே! ஏன் வீண் கஷ்டம். அவைகளை நிறுத்திவிட்டு, தேவியினுடைய பாததூளியை விதிவத்தாக பூஜித்தால், அவர்களுக்கு அஷ்டைச்வர்யமும் பொங்கிவரும். இதனுல் புபுக்ஷுக்களுக்கும் அம்பாளுடைய பாததூளி ஐச்வர்ய ப்ரதம் என்று நன்ருக வெளியாகிறது.

அத்துடன் ப்ராணிகள் கிஞ்சிக்ஞாளாக விளங்கிவருகிறார்கள். சென்ற விஷயங்களையோ, வரும் விஷயங்களையோ, அறிய

சக்தியே இல்லை. அந்த சக்தி இல்லாத காரணத்தால்தான் ஸுகத்தை அடைந்து கொள்வதற்கு எவ்விதமான உபாயத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று தெரியாமலேயே கஷ்டப்படுகிறார்கள். ஸுகஸாதனமென்று ஏதோ ஒரு உபாயத்தை அனுஷ்டித்து வருகிறார்கள். அது ஸுகத்தைக் கொடுக்காத போனாலும், மஹத்தான துக்கத்தைக் கொடுக்கிறது. நாளை எது நேரிடப் போகிறது என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டால், ப்ராணிகளுக்கு எவ்வளவு சௌக்யம் ஏற்படும். ஆகையால் சென்ற விஷயங்களையோ, வரும் விஷயங்களையோ, தூரத்திலுள்ள விஷயங்களையோ, ஸமீபத்திலுள்ளவைகளையோ, ஸ்தூல விஷயங்களையோ, ஸூக்ஷ்ம விஷயங்களையோ எல்லா விஷயங்களையும் அறியக்கூடிய சக்தி தனக்கு ஏற்பட்டு, தான் ஸர்வக்ஞனாக ஆக வேண்டுமென்று நினைப்பவனும், அம்பாளுடைய பாததூளியை நன்றாக கைபிடித்துக்கொள்ள வேண்டும். இதனால் தேவியினுடைய பாததூளியை உபாஸிப்பவர்களுக்கு ஸர்வக்ஞத்வமும் ஸித்திக்கிறது. எல்லா விஷயத்தையும் அறியக்கூடிய ஞானத்தை, கல்பவ்ருக்ஷத்தினுடைய பூங்கொத்துகள், தேனை ப்ரவாஹிக்கச் செய்வதுபோல், ஆனந்தத்தை ப்ரவாஹிக்கச் செய்யும்படி அம்பாள் அருள் செய்கிறாள்.

அத்துடன் மூலக்ஞான மென்றும் தமஸ் என்றும், மாயை என்றும் சொல்லப்படுகிற ஒரு பெரிய இருளானது, 'ஆத்மா என்றால் யார்? ஈச்வரனென்றால் யார்? ஈச்வரனுக்கும் ஆத்மாவுக்கும் என்ன ஸம்பந்தம்?' என்ற தத்வங்களை ஜீவகோடிகளுக்குத் தெரியவிடாமல் மறைத்துக்கொண்டு, ஹிம்ஸித்து வருகிறது என்ற விஷயமும் லோகத்தில் ப்ரஸித்தமானது. அந்த அவிவேகமாகிய இருளைப் போக்கடிப்பதில் அம்பாளுடைய பாததூளியானது ஸூர்யன் உதிக்கின்ற ஸமுத்ரத்தினுடைய மத்யப்ரதேசம்போல் இருந்து வருகிறது. அதாவது, அம்பாளுடைய பாததூளியை கைப்பிடித்தவனுக்கு, மாயையாகிற இருள் விலகிப்போய் ஆத்ம தத்வம் நன்றாக ப்ரகாசிக்கிறது என்பது வெளியாகிறது. இந்த ஜீவகோடிகளுடைய ஹ்ருதயத்திலுள்ள இருளைப் போக்கடிக்கிற சக்தி என்பது அம்பாள் ஒருவளுக்குத்தான் உண்டு. இதைத்தான்

हार्दसंतमसापहा ஹார்த்தஸம்தமஸாபஹா

என்ற நாமாவினால் ஸ்ரீ லலிதா த்ரிசதியில் ப்ரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மாயையிலிருந்து விலக வேண்டுமானாலும் தேவியினுடைய பாததூளியை ஆச்ரயித்துத்தான் ஆகவேண்டும்.

இதனால் தேவியினுடைய பாததூளியை முன்சொன்னபடி ஆராதிக்கிறவர்களை பராசக்தியானவள், மாயா பாசத்தி

விருந்தும் விடுவித்து, ஸர்வக்ஞத்வ சக்தியையும் அகண்டமான ஐச்வர்யத்தையும் கொடுத்து, அமானுஷமான திவ்ய போகங்களையும் அனுபவிக்கும்படி செய்துவிட்டு, க்ரமமாக தனது ஸாயுஜ்யம் என்ற கைவல்யத்தையும் கொடுத்து, அனுக்ரஹம் செய்கிருள் என்பது வெளியாகிறது. ஆகையால் ச்ரேயஸ்ஸை இச்சிக்கிற ஜனங்கள் தேவியினுடைய பாததூளியை அவச்யம் ஆராதிக்க வேண்டும் என்பது ஸித்தமாகிறது.

### 4. மோக்ஷப்ரதமான பாதகமலங்களின் நிகரற்ற சக்தி

**त्वदन्यः पाणिभ्यां अभयवरदो दैवतगणः**

**त्वमेका नैवासि प्रकटितवराभीत्यभिनया ।**

**भयात् त्रातुं दातुं फलमपि च वाञ्छासमधिकं**

**शरण्ये लोकानां तव हि चरणावेव निपुणौ ॥ ४ ॥**

த்வதந்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடிதவராபீத்யபிநயா ।
பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சாஸமதிகம்
சரண்யே லோகாநாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ ॥ 4 ॥

பதவுரை: —

**लोकानां** - லோகாநாம் = ஸகலமான ப்ராணிகளுக்கும் **शरण्ये** - சரண்யே = சரணுகதியடையத் தகுந்தவளான (அதாவது ஸர்வ லோகங்களையும் ரக்ஷிக்கிறவளான) **हे भगवति** - ஹே பகவதி = ஹே பராசக்தியே **त्वदन्यः** - த்வதந்ய: = உன்னைக் காட்டிலும் வேருன **दैवतगणः** - தைவதகண: = விஷ்ணு, சிவன், ப்ரும்மா, முதலான தேவதைகளினுடைய ஸமூஹமானது **पाणिभ्यां** - பாணிப்யாம் = கைகளிஞலே **अभयवरदः** - அபயவரத: = அபய முத்ரையிஞல் அபயம் என்ற மோக்ஷத்தையும் வர முத்ரையிஞல் வரமாகிய போகத்தையும் கொடுக்கிறதாக **भवति** - பவதி = ஆகின்றது. **त्वं** - த்வம் = நீயோ **एकैव** - ஏகைவ = ஒருவள்தான் **पाणिभ्यां** - பாணிப்யாம் = கைகளிஞல் **प्रकटितवराभीत्यभिनया** - ப்ரகடிதவராபீத்யபிநயா = மோக்ஷத்தையும், போகத்தையும் கொடுக்கும் சக்தியுள்ள முத்ரையை ப்ரகடனம் செய்கிறவளாக ஆகாமலிருக்கிருய் **इति** - இதி = என்று ஆலோசித்து

**तव** - தவ = உன்னுடைய **चरणावेव** - சரணுவேவ = திருப் பாதகமலங்களே **भयात्** - பயாத் = ஜன்ம மரண ரூபமான ஸம்ஸார பயத்திலிருந்தும் **त्रातुं** - த்ராதும் = ரக்ஷிப்பதற்கும் **वाञ्छासमधिकं** - வாஞ்சாஸமதிகம் = பக்தனுடைய அபேக்ஷைக்கு அதிகமான **फलं** - பலம் = லாபத்தையும் (பலனையும்) **दातुमपि** - தாதுமபி = கொடுக்கிறதற்கும் **निपुणौ हि** - நிபுணௌ ஹி = ஸாமர்த்யமுள்ளதாக ஆகிறதல்லவா? **च** - ச = இந்த வைபவந் தான் மற்ற தேவதைகளைக் காட்டிலும் உனக்குள்ள மஹிமையை வெளிப்படுத்துகிறது.

**தாத்பர்யம்:—**

ஸாக்ஷாத் பராசக்தி என்ற தேவதையானவள் ஸகலமான ப்ராணிகளுக்கும் மாதாவானதினுல்

**मातृदेवोभव** மாத்ருதேவோபவ

என்ற ச்ருதியை அனுஸரித்து மிகவும் முக்யமான தேவதையாக ஆகிருள். மற்ற தேவதைகளுக்கு ஸமமாக பராம்பிகையை நினைக்கக்கூடாது. மற்ற தேவதைகளைப் போலவே நினைத்து விட்டால் ஸகல ப்ராணிகளையும் ரக்ஷிக்கின்ற தேவதைகளுக்குள் இந்த தேவதை முக்யமான தேவதை என்று சொல்லுகிற சாஸ்த்ரங்களெல்லாம் வீணுக ஆகிவிடும். ஆகையால் பராம்பி கையை ஒரு விசிஷ்டமான தேவதையாகத்தான் ஸர்வவாதிகளும் ஒப்புக்கொள்ள வேண்டிவரும். அதனுலேயே 'மற்ற தேவதை களைப் போல் கைகளாலேயே போக மோக்ஷங்களை, ஜனங்களுக்கு நாமும் கொடுத்தால், மற்ற தேவதைகளைப் போலவேதான் நாமும் ஒரு தேவதை என்று ஆகிவிடுவோம்' என்ற எண்ணத் துடன் 'அவ்விதம் நாமும் செய்வது ஸரியல்ல' என்று தீர் மானித்து,

**अभयं** அபயம்

என்ற மோக்ஷத்தைத்தரும் அபய முத்ரையை வலது கையிலும்,

**वरं** வரம்

என்ற போகத்தைக் கொடுக்கும் வரமுத்ரையை இடதுகையிலும் தரித்துக்கொள்ளாமலேயே பராசக்தியானவள் விளங்கி வரு கிருள். பரதேவதையினுடைய பிம்பத்தில், வர அபய முத்ரைகள் கைகளில் இராது என்பதை வித்வான்கள் அறிந்துகொள்ளலாம்.

அப்படி இராததற்கு காரணமும், 'மற்ற தேவதைகளைப் போல் தேவியை நினைக்கக்கூடாது; பராசக்தி பரமோத்க்ருஷ்ட மான தேவதை; அந்த தேவதைக்கு ஸமானமாக மற்றொரு தேவதையுமில்லை; அந்த தேவதைதான் ஸர்வலோகங்களுக்கும்

முக்ய சரண்ய தேவதையாக ஆவாள்' என்ற ஸித்தாந்தந்தான் ஆகும்.

இவ்விதம் பராசக்தியானவள் வராபய முத்ரையை கைகளில் தரித்துக்கொள்ளாமலிருப்பதை சில பக்த ஜனங்களால் பார்த்து நாம் என்ன உபாஸித்தாலும் அபயத்தையும், வரத்தையும் தேவி கொடுக்கப்போகிறதே இல்லை. அதை ஸூசிப்பிக்கிற முத்ரைகளைக் கைகளில் காணோமே ஆகையால் நாம் வீணாகப் பூஜிப்பதில் என்ன பயன், என்று நினைத்து, சிலபக்த ஜனங்கள் பராசக்தியினுடைய ஸமாராதனத்திலிருந்து வைமுக்யத்தை (வெறுப்பை) அடைய யத்னம் செய்துகொண்டிருக்கும் பொழுதும், பராசக்தி உதாஸீனமாகவே இருந்துவிட்டாள். அந்த ஸமயம் தேவியினுடைய திருப்பாத கமலங்கள் முன்வந்து 'பக்தகோடிகளுக்கு போகாபவர்க்கங்களை நாங்களே தருகிறோம்' என்று கர்ஜித்துவிட்டு, அவ்விதமே பக்த ஜனங்களுக்கு போக மோக்ஷத்தைக் கொடுத்து ஸ்ரீவித்யையாகிற பராம்பிகையினுடைய ஸமர்ச்சனத்தில் ப்ராணிகளை ச்ரத்த பக்தியோடு கூடினவர்களாகச் செய்தன. இதனால் தேவியினுடைய சரணங்களே போகாபவர்க்கங்களை கொடுக்கக் கூடிய சக்தியுள்ளவைகள்; மற்ற தேவதைகள் கைகளால் கொடுக்கும் போகாபவர்க்கங்களை தேவியானவள் தனது திருப்பாத கமலங்களால் கொடுத்து விடுகிறாள் என்பதினாலேயே, தேவிதான் பரமோத்க்ருஷ்டமான தேவதை என்பது வெளியாகிறது. முமுக்ஷுக்களுக்கோ, காமிகளுக்கோ, முக்த ஜனங்களுக்கோ, அம்பாளுடைய திருப்பாத கமலங்கள்தான் எப்பொழுதும் பஜிக்கத் தகுந்த வஸ்து தத்வம் என்பது இந்த ச்லோகத்தால் வெளியாகிறது. தேவியினுடைய சரணங்களின் மஹிமையானது அளவிட முடியாதது என்பது இந்த ச்லோகத்தின் முக்ய கருத்தாகும்.

ஆகையால் ச்ரேயஸ்ஸை விரும்புகிற ஸகலமான ஜனங்களும் பராசக்தியினுடைய ஸ்ரீ-பாத கமலங்களை பூஜித்து அதி ஸுலபமாக ஸகலவிதமான ஸௌபாக்யத்தையும் அடையலாம்.

தேவியினுடைய சரணங்களின் மஹிமையைச் சொல்லும் இந்த ச்லோகமோ அமானுஷமான திவ்ய போகங்களையும் கொடுத்து க்ரம முக்தியைக் கொடுக்கும் வல்லமையுள்ளது. ஸுவர்ணத்திலோ, ரஜதத்திலோ, தாமரத்திலோ, பூர்ஜபத்ரத்திலோ * யதா சக்தி (ரொம்பவும் பெரியதில்லாமலும், ரொம்பவும் சிறியதில்லாமலும்) ஒரு பிந்துவை எழுதி, அந்த பிந்துவை

* 'பூர்ஜம்'—ஹிமய மலையின் தாழ்வரையில் இருக்கக்கூடிய ஒரு வ்ருக்ஷத்தின் இலை.

